13th February 1959]

இல்லை' என்று மீண்டும் 'ரிட்' போட்டிருப்பதாகவும் தெரிகிறது. ஆகையால் இப்போதைக்கு அவசரப்படவேண்டாம் என்ற எண்ணத்தில் இந்தக் காரியம் தாமதப்படுத்தப்பட்டு வருகிறது.

**Sri A. GOVINDASAMY** : டபில் டெக்கர் பஸ் 'விஜயா' எப்போது பழுதடைந்தது ? அது எப்போது ரிப்பேர் செய்யப்படும் ? அது 'ரிப்பேர்' செய்யப்படுமா அல்லது 'கண்டெம்' செய்யப்படுமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : இதிலிருந்து, கனம் அங்கத்தினருக்கு விஜயாவிடத்தில் அதிக அன்பு இருப்பதாகத் தெரிகிறது. (சிரிப்பு).

*Separate Agricultural division for Villupuram*

* 310 *Q.*—**Sri A. GOVINDASAMY** : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether a separate Agricultural division has been created for Villupuram ; and

(*b*) the number of tractors and oil-engines allotted to the division?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : (*a*) Yes, Sir.

(*b*) There is no separate allocation of tractors and oil engines for each division. There are 14 tractors and 37 oil engines in South Arcot district which are stationed at Cuddalore and diverted for work in the entire district including this division according to demand.

**Sri A. GOVINDASAMY** : தென்னாற்காடு ஜில்லாவில் விவசாய இலாகாவை இரண்டாகப் பிரித்துவிட்டு விழுப்புரத்திற்குத் தேவையான டிராக்டர்களையும் எஞ்ஜின்களையும் கடலூரில் வைத்திருப்பதில் என்ன அர்த்தம் ? விழுப்புரத்திற்குத் தேவையான டிராக்டர்களையும் எஞ்ஜின்களையும் விழுப்புரத்திற்கே மாற்ற அரசாங்கம் யோசிக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : மற்ற வேலைகளை கவனிப்பதற்காகத்தான் இந்த மாவட்டம் இரண்டாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. எஞ்ஜினியரிங் வேலையைப் பொறுத்தவரையில் அந்த மாவட்டத்திற்கு ஒரு எஞ்ஜினியர்தான் இருக்கிறார். அங்கே டிராக்டர்களும் புல்டோஸர்களும் குறைவாக இருக்கின்றன. ஆகவே, அவைகளையெல்லாம் ஒரே இடத்தில் வைத்திருந்து எங்கெங்கெல்லாம் வேண்டுமோ அங்கெல்லாம் கொடுப்பதுதான் உசிதம் என்று கருதி, அவ்வாறே செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

*Trade union workers*

* 311 *Q.*—**Sri M. KALYANASUNDARAM** : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to bring in suitable legislation for giving protection to trade union workers against victimisation ; and

(*b*) what are the features of the proposed Bill?

**The Hon. Sri R. VENKATARAMAN** : (*a*) No, Sir.

(*b*) Does not arise.